ஓம் தக்ஷிணக் குமாரக ஆஞ்சநேயர் துணை.

ஸ்ரீ விஸ்வநாதர் குருசகாயம்.

# திருச்செந்தூர் மான்மியம்

எனும்

# செந்தூர்ஸ்தலப்புராண வசனம்

இஃது

மதுரை திண்டுக்கல் ரோட் கலைமகள் நிலையம்

எட். பாலுசாமி நாயுடு அச்சிட்ட பிரதியை

மதுரை தாலூகா வில்லாபுரம் ஸ்ரீமான்

தே. அ. ப. ஆறுமுகம்பிள்ளை அவர்கள்

பொருள் உதவியால்

மதுரை தாலூகா வில்லாபுரம் ஸ்ரீ விஸ்வநாத விலாசம்

கே. நாராயணன் அண்ட் கோ.,

பேஷ்ஜூசாமிபிள்ளையால்

...சுப்பிரமணிய விலாஸ் பிரஸில்

...பதிப்பிக்கப்பட்டது. [காப்பி 1000

காப்பி ரிஜிஸ்டர்ட் [அணா 3.

ஓம் தத்ஸத்

ஸ்ரீ விலக்ஷணானந்த குருசகாயம்.

# திருச்செந்தூர் மான்மியம்

எனும்

# செந்தூர்ஸ்தலப்புராண வசனம்





இஃது

மதுரை திண்டுக்கல் ரோட் கலைமகள் நிலையம்

எம். பாலுசாமி நாயுடு அச்சிட்ட பிரதியை

மதுரை தாலூகா வில்லாபுரம் ஸ்ரீமான்

தே. அ. ப. ஆறுமுகம்பிள்ளை அவர்கள்

பொருள் உதவியால்

மதுரை தாலூகா வில்லாபுரம் ஸ்ரீ விலக்ஷணானந்த விலாஸம்

பி. கே. நாராயணன் அன்கோ.,

பி. கே. என். பொன்னுச்சாமிபிள்ளையால்.

சாத்தூர் சுப்பிரமணிய விலாஸம் பிரஸில்

முதற்பதிப்பு] பதிப்பிக்கப்பட்டது. [காப்பி 1000

இதன் விலை] 1924. [அணா 3.



ஓம் தத்ஸத்

ஓம்கணேசாயமங்களம்.

# திருச்செந்தூர் மான்மியம்.

## கடவுள் வாழ்த்து.

சீரார் கடம்பணியுஞ் செவ்வே ளிருதாளை
ஏரா ரடியவர்க ளேற்றவளர் பேரார்
திருச்செந்தூர் மான்மிதத்தை செப்பிடவே யானை
யருட்சந்த தந்துணையேயாம்.

## சிவபிரான்.

வித்தெனவும் வித்தினுள் விளைமணிய தாகிய
சத்தெனும் வடிவமாய்த் தற்பரம் பொருளதா
யத்தனை நின்றசோதி யைங்கரனை யீன்றிடுஞ்
சத்திபாக னின்பதந் தலைமிசை யணிகுவாம்.

## ஈஸ்வரி.

கங்கையுந் தும்பைக் கடுக்கையோ டெருக்குத்
திங்களுஞ் சடையிற் சேர்சிவ னிடப்பாற்
பங்கையும் பெற்றப் பார்வதி யாளின்
பங்கைச் செம்மலர்ப் பாதமே பணிவாம்.

## குமரன்.

வஞ்ச மொன்று மன்றியே
தஞ்ச மென்று சண்முகன்
கஞ்ச மொன்று மின்கழல்
நெஞ்ச மென்றும் நினைகுவாம்.



## திருச்செந்தூர் மான்மியம்.

### வீரவாகு.

வஞ்சநெஞ்சசுரேசனி னுடல் வகிர குக்குடமயிலென
மிஞ்சுபரி கொடிவெனவடைவடிவேலன் மலரடிபணிசெய
வஞ்சிபார்வதிபாத கிண்கிணிவந்திடுநவசத்தியின்
மஞ்சனாகிய வீரவாகுவை மனரதத்தினி லேற்றுவாம்.

### வேலாயுதம்.

சரதமிருவெஞ் சரமேமிகவிட்
டிரதந் தனில்வந் தெதிரிடுசூர
னிரதமுருவுற் றிட்நேர் கூர்செய்
வரதந் தருவே டனைவணங் குதுமே.

### விஷ்ணு.

மாமலர்த் தடமன்னிய செந்தில்வாழ்
தேமலிந் தொளிர் சீதப்பசுந் துளாய்த்
தாமமானதணிந் தகமேமகிழ்
காமன்றாதை நங்கண்ணனைபேற்றுவாம்.

### சரஸ்வதி.

ஆரணனென வவனி யளந்திடுங்
காரணன் றுறிக் கஞ்சமலர்க் கழல்
நாரணன்சுத னார்மணி நாவில்வாழ்
பூரணச்செல்வி பொற்பதம் போற்றுவாம்,

### அவையடக்கம்.

வேதமா நீதிநான் வீழுதே னீரெலா
நீதமா யோருசார் நேமமாய் நீங்கா
போதமா சாலைபோன் பேருசீர் பாவலார்
ஆதமா பாதமே யாதியாஞ் சூடுவாம்.

கடவுள் வாழ்த்து

(முற்றிற்று.)

## முதலாவது

# நைமிசாரணியச் சருக்கம்.

திருவுறையும் திருமார்பனாகிய திருமாலினது திருவுந்தியிற்றோன்றிய திசைமுகக்கடவுள் சிருட்டித்த, இடமகன்ற இப்பூமண்டலத்தின்கண் இருடியர்தவம்புரிவதற்குத்தகுந்ததானமாய் புராணங்களென்னும் பைங்கூழ்விளையும் நல்ல செய் நிலனாய் அடவிகட்கெல்லாமரசெனற் பாலதாய் விளங்காநின்ற "நைமிசாரணியத்தில்" வசிக்கின்றவர்களும், வேதவேதாந்தங்களை ஐயந்திரிபற அறிந்தவர்களும் சொரூபத்தியானஞ் செய்கின்றவர்களும் ஸ்ரீ சிவஹரிசங்கீர்த்தன சீலர்களுமாகிய சௌனகர்திமகரிஷிகள், ஓர்தினம் பிராதகாலத்திலெழுந்து ஸ்நான சந்தியாவந்தன ஜெபஹோமாதி முதலாகிய நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு அந்த நைமிசாரணியத்தி லோர்பால்வரும்போது அவ்விடத்தில் முனிவர்களுட்சிரேஷ்டரும்பத்மாசனத்திலிருந்து நான்குவேதம் ஆறு சாஸ்திரம் பதினெண்புராணம் இருபத்தெட்டாகமம்முப்பத்திரண்டுபநிடதம்அறுபத்துநான்குகலைக்கியானம் தொன்னூற்றாறு பிரபந்தமுதலிய இதிகாசங்களைக் கற்றுணர்ந்தவரும் வேதசுரங்களையிடமறிந்து மெலித்தும் வலித்தும் உரைக்கத்தக்கவரும் பகுதி விகுதியறிந்து பிரகாணத்திற்குத் தக்கபடி சொற்களை உபயோகிக்கத்தக்கவரும் உயிரக்ஷரம் மெய்யக்ஷரம் தனை மாத்திரை தப்பாமல் உச்சரிக்கவல்லவரும் மந்திரங்களை யந்திரதேவதா கல்பங்களுடன் அறிந்தவரும் சகலவேதாகம புராணங்களுடைய பொருள்களைநிச்சயித்து நவிலத்தகுந்தவரும் வைதீக, லௌகிக வாக்கியங்களை ஓசைகுன்றாமல்இணக்கத்தக்கவரும், சொற்களுக்கெல்லாம்செம்பொருள், ஆக்கப்பொருள், குறிப்புப்பொருள்களை நிச்சயிக்க வல்லவரும், தர்மசூட்சுமத்தைச் சந்தேகமறப் பகரவல்லவரும் சமயோசிதமாய்ப் பேசுந்திறமை வாய்ந்தவரும், விதிவழுவாது அனுஷ்டானம் புரிபவரும், தேகதத்துவங்களை ஐயமறவுணர்ந்தவரும், காமக்குரோதாதிகளைக் கண்டித்தவரும், பஞ்சேந்திரியங்

களைத் தம் வயமாக்க வல்லவரும் சரியை கிரியை யோகம் ஞான மெனனும் பூசையியல்புகளை முறையே யுணர்ந்தவரும், அஷ்டமாசித்திகளிற்றெளிந்தவரும், அஷ்டாங்க யோகமார்க்கங்களிற் பழகியவரும், பிரமநிஷ்டரும், பிரமதேஜசையடைந்தவரும், சகல முனிவர்களாலும் பூஜிக்கப்பட்டவருமாகிய சூதமகாமுனிவரைக்கண்டார்கள்.

அவ்வாறு கண்டவுடன் முறைப்படி வணங்கி ஓங்காரவடிவமாகிய குகப்பெருமான் பக்திலீடுபட்டவர்களாய் மேற்கண்ட நைமிசாரணியவாசிகளாகிய ரிஷிகளெல்லோருமொன்றுகூடி அந்தச் சூதாமகாமுனிவரைப்பார்த்து ஓ மகானுபாவரே! ஓ புராண சிரேஷ்டரே!! ஓ சூதமாமுனியே!!! சந்திரனை நிகர்த்த உம்முடைய முகத்தினின்றும் நாவழியாகவுண்டாகிய அமுதம்போன்ற சரிதங்களை அடிக்கடிச்செவியுற்றிருப்பினும் மற்றொரு விசேஷ விருத்தாந்தத்தை இப்பொழுது கேட்கவிருப்புற்றவர்களாயிருக்கின்றோம். அதாவது எந்தக் கதாப்பிரசங்கத்தின் சிரவணமாத்திரத்தில் மானிடர் பாவங்களினின்று நீங்குகின்றார்களோ அச்சரிதமாகிய சிந்துபுரமெனும் புண்ணிய க்ஷேத்திரமாகியத் திருச்செந்தூர் மகிமையைச் சவிஸ்தாரமாய்க்கேட்க அவாவுற்றனம் ஆதலின் கிருபைபாலித் துரைத்தருளவேண்டுமென மிக்க அன்போடுவினவினர்.

புராணசிரேஷ்டரான சூதமகாமுனிவர் முனிவர்களைநோக்கி நைமிசாரணியவாசிகாள், நும்மொழிகளைக்கேட்டு மிக்க களிப்படைந்தனன் நும்மாற் கேட்கப்பெற்ற இவ்வற்புதமான புண்ணிய சரிதமானது சொல்வோரையுங்கேட்டானந்திப்போரையும் சந்தேகமின்றி சர்வபாவங்களினின்றும் அப்பொழுதே நீக்கக்கூடியது. இத்தகைய சிரவணத்தை நீங்கள் விரும்பியபடியால் மனோபீஷ்டத்தை நிறைவேற்றுகிறேனென்றுகூறித்தபோதனர்களை ஆசனங்களிலமரச்செய்து சகல சாஸ்திரங்களையும் நன்குணர்ந்த தமது குருமூர்த்தமாகிய ஸ்ரீ வியாசபகவானை நமஸ்கரித்துப் பின்னர் தாமும் ஓர் தவசிலிருந்து இச்செயந்திபுரமென்னும் திருச்செந்தூர் மான்மியமனைத்தும் பவக்கடல்கடந்து சுகப்

பிர்மரிஷியை நோக்கி வேதவியாசர் சொல்லியபடியே நாமும் சொல்கின்றோம். தபசிகாள்! மற்றெவ்விடத்தும் மனதைச்செலு த்தாமற் கேட்பீர்களெனச் சொல்வாராகினர்.

## முதலாவது
## நைமிசாரணியச் சருக்கம்
(முற்றிற்று)

---

## இரண்டாவது
## சுகருக்குபதேசச் சருக்கம்

---

பூமகள் மருகன் திருவருள்முருகன் பொருந்தியேவளரும் ஜெயந்தியென்றோங்கி, ஆணவம், மாயை, காமியமென்கின்றமுக் குற்றங்களைநீக்கி சின்மயனொளிவைக் காணுமெய்ஞ்ஞானி இரு தயகமலந்தனை நிகர்த்தொளிரும் திருச்செந்தூர்ப்பதியின் கண் வதனாரம்ப தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து நமதிறைவனாகியக் கந்தனை மும்முறை பிரதட்சணம்புரிந்து வணங்குகின்றவர் தே வாம்சராகியும்,மூன்றுநாள்வதனாரம்பத்திலேமுழ்கி, சோடசோ பசாரத்தால் சரவணபவனைப் பூசிக்கின்றவர் கற்பகக்காவுக் கரச ஞகிய இந்திரனது பதவியையும் பெற்றுய்வர். அன்றியும் குகப் பெருமான் மந்திரமாகிய ஆறெழுத்துள்ளோரெழுத்தைவுச்சரி க்கின்றவர் அசுவமேதப்பலனையும், சடாக்ஷரத்தை மனதினிட மாகச் சதாகாலமுமுபாசிக்கின்றவர் மறைமுறைக்கிணங்க ஆயி ரங்கோடியாகங்கள் புரிந்தபலத்தினையும், மற்றமந்திரங்களாலே தருதற்கரிய பதத்தினையுமடைகின்றனர். கேளும், சுகப்பிர்ம னே வேதகோஷ்டங்களேமுழங்குகின்றசெயந்திமாநகரத்திலே ஸ்ரீமத்தகண்டாகாரப் பரப்பிர்மசொரூபி கரவேதசாகரவமுதம் போன்ற, உமாபதிபுதல்வனாகிய குமரனை தரிசிக்குங்கண்களே கண், அன்னவரைத் தொழுதுவணங்கும் கரங்களேகரம், சிரங் களேசிரம், அவர்நாமங்களை உச்சரிக்கின்ற நாவே நாவென்று வேதங்களோதுகின்றன. இந்தஒப்பற்ற செயந்திபுரத்திலேயொ

ருதின முபவாசவிரதமிராதவர்யாவராகினும் அவர்ஜெனனமுதல் மரணபரியந்தம் தவஞ்செய்தாலும் யாதொருபலனையுமடையத்த குந்த மார்க்கங்களில்லை. அன்னவர்ஜெனனமுமிருகஜெனனமாக முடியும்; ஆதலால், செயந்திபுரமே தேவலோகம், அதில் வசிக் கின்றவர்களே தேவர்கள், அவருடன் சம்பாஷிக்கின்றசொல்ல னைத்தும் வேதமந்திரம், அவரோடினிமையாய்வசித்தாலேஉயர் ந்த மோக்ஷபதவிக்குமேலானவையென முன்னம் சனகுமாரமு னிவர் அமுதமாகப்பேசிய சிந்துபுரமென்னுந் திருச்செந்தூர் மான்மியமனைத்தையுஞ் செவ்வையாகச் சொல்கின்றேனென்ப சுகப்பிர்மரிஷியை நோக்கி வேதவியாசருரைப்பதாகினர்.

இரண்டாவது

சுகருக்குபதேசச்சருக்கம் முற்றிற்று

---

மூன்றாவது

# செயந்திபுர வைபவச்சருக்கம்.

---

வேதப்பொருளாகிய பிரணவமந்திர சொரூபரான குமாரக் கடவுள் வளர்ந்தோங்கி கருட காந்தர்வ கின்னர கிம்புருட சித் தவித்தியாதரர்முதலிய பதினெண் கணங்களாலும்புகழப்பெற்ற திருச்செந் தூர்ப்பதியின்கண், சொல்லற்கரிய பாதங்களை நீக்கி நின்மலதேகத்தைத்தரவல்ல, மகாமகத்துவம்பொருந்திய தீர்த் தங்களுள்ளன; அவற்றின் பெருமைகளனைத்தையும் என்னாலு ரைக்கத்தரமன்று, ஆகினுமொருவாறு சுருக்கமாகச் சொல்கின் றேன் கேளும், சுகப்பிர்மனேபிரவைம், இச்சாசத்தி, ஞானசத் தி, கிரியாசத்தி, ஆதிசத்தி, பராசத்தி யென்கின்ற ஆறுமுகங்க ளுடன் பிரகாசிக்கின்ற நம்பெருமானாகிய முருகக்கடவுளின் முன்னரோர்கால் காயத்திரி மந்திரமானவை சென்றன்னவர் பா த தாமரையைச் சிரமேற்கொண்டு பலநாமங்களாலுந் தோத்தி ரஞ்செய்தெமதாண்டவனே யான் கோறினவார்த்தைக்கிருபைபா

வித்தருளவேண்டுமென்னப் போற்றிநிற்கச் செந்திற்குகந்த கந்தன்மகிழ்ந்து யாதுவரம்வேண்டுமெனக் காயத்திரியுந் தனது வடிவமாகிய இருபத்திநான்கு அட்சரங்களும் இருபத்திநான்கு தீர்த்தங்களாக வெவ்வேறு நாமங்களைப்பெற்று இப்பதியின்கண் சமுத்திரத்தின் சார்பே உண்டாகவேண்டுமெனக்கேட்கலும் குமாரகுருவும் அத்தகையே யாகுகவென்று வரங்கொடுக்க இருபத்தி நான்கு அக்கரங்களும் இருபத்திநான்கு தீர்த்தங்களாக வெவ்வேறு நாமங்களைப்பெற்று பிரகாசித்தன. அந்நாமங்களோ, முகாரம்பம், தெய்வயானை, இலக்குமி, சித்தர், திக்குபாலகர், காயத்திரி, சாவித்திரி, சர்சுவதி, அயிராவதம், வயிரவம், வள்ளி, துர்க்கை, ஞானம், சத்தியம், தருமம், முனிவர், தேவர், பாவநாசம், கந்தபுட்கரணி, சேது, கங்கா, கந்தமாதனம், மாதுரு, தென்புலத்தார் என்று சொல்லப்படுகின்ற நாமங்களாம். இனி அதனில் மூழ்குகின்றவரடையும் பலனையும் வேதவியாசர் சுகருக்குபதேசித்ததையு முங்களுக்குச் சொல்வேனெனச் சூதமுனிவர் நைமிசாரணிய மகரிஷிகளுக்குரைப்பதாகினர்.

இத்தீர்த்தங்களில் முகாரம்பதீர்த்தமானது மந்தமாருதம் வந்துலவிடுகச் செந்தேன்வடிக்கும், பூங்கமழ்வனத்திற் பசிய தோகையைவிரித்து நடமிடும் மயில்வாகனநாதனாகியக் கந்தக்கடவுளின்கருணையாகிய அமுதவாரியைக்கொடுத்தருளும்; தெய்வயானைத்தீர்த்தமானது மும்மதங்களைப்பொழிகின்ற வெள்ளையானையின்மீது பவனிவருகுங் கற்பகக்காவுக்கரசனாகிய இந்திரனாலும் பெருதற்கரிய பெண், ஆடை, அணிகலம், போஜனம் தாம்பூலம், பரிமளம், பாட்டு, பூவமளி யென்கின்ற இன்பமானதைக் கொடுக்கின்றன; இலக்குமிதீர்த்தமானது சகல சம்பிரம ஒய்யார வைபோகசாலியென்னும் வடதிசைக்கதிபனாகிய குபேரனாலுமடைதற்கரிய ஐஸ்வரியங்களைத்தருகின்றன; சித்தர்தீர்த்தமானது காமம், மயக்கம், வெகுளியெனும் முப்பகையையும் முத்திக்குவிக்கினமாகிய உடல், உலகு, பசாசு யென்கிற பகையினின்றுநீக்கி முத்திவழியை நாடச்செய்கின்றன; திக்குபாலகர்தீர்த்தமானது கங்கை, யமுனை, காவிரி முதலிய தீர்த்தங்கள்

கொடுக்கும்பலனைக் கொடுத்தருளும்; காயத்திரி தீர்த்தமானது வேதின் முறையாக அனேகயாகங்களைச்செய்தவரடையும்பலனைக்கொடுத்தருளும்; சாவித்திரி தீர்த்தமானது பிரமேந்திராதி தேவர்களாலுங் காணற்கரிய உமாதேவியின் பொற்பதத்தை தெரிசித்த பலனைக்கொடுத்தருளும்; சரசுவதிதீர்த்தமானது சகலாகமபுராண இதிகாசங்களையறியத்தகுந்த நன்மதியைக்கொடுத்தருளும்; அயிராவததீர்த்தமானது சந்திரபதாகை, பன்னசை, முதலியநதியிற் படிவோரடையும் பலனைகொடுத்தருளும்; வயிரவதீர்த்தமானது சரஷவதி, சோணை, பொருநை முதலியநதிற்றோய்ந்தோரடையுங்கதியைக்கொடுத்தருளும்; வள்ளிதீர்த்தமானது ஏகமனதாய்ப் பிரணவமந்திர சொரூபமாய்ப் பிரகாசிக்கின்ற கந்தக்கடவுளின் செந்தாமரைப்பதத்தை தியானஞ்செய்யும் ஞானத்தைக் கொடுத்தருளும்; துர்க்கைதீர்த்தமானது இம்மையிலேசெய்யுந்துன்பத்தைப்போக்கிநன்மையைக்கொடுத்தருளும் ஞானதீர்த்தமானதுபரவுவார்க்கும்,பரவுதற்குநினைத்தோர்க்கும் நன்மையைக்கொடுத்தருளும்; சத்தியதீர்த்தமானது களவு, கள்ளுண்டல், குருநிந்தை,கொலை, பொய்யென்கின்ற ஐந்துடன் சத்தவிசனமாகிய அகங்காரம், உலோபம், காமம், பகை, போஜனப்பிரியம், காய்தல், சோம்பல் இவைகளையும், தூலம், சூக்குமம் அதிசூக்குமமெனச்சொல்கின்ற பாதகம், அதிபாதகம், மகாபாதகமாகிய மூன்றினின்றுநீக்கித் தனதுசித்தத்தை நன்னெறியினிற்கச்செய்து மோக்ஷசாம்பிராஜ்ஜியத்தைக்கொடுத்தருளும்; தருமதீர்த்தமானது தீவினையெனும் வேறைக்களைந்துதேவாமுதமாகிய மங்களகரத்தைக்கொடுத்தருளும்;முனிவர்தீர்த்தமானவைசுயம் பிரகாசவடிமாகிய ஜெகத்ரக்ஷகனைக்கண்ணுற்ற பலனைக்கொடுத்தருளும்; தேவர்தீர்த்தமானவை காமம், குரோதம், லோபம் மோகம், மதம், மாச்சரியமெனும் ஆறு குற்றங்களையுங்கடிந்து ஞானமுதத்தைக் கொடுத்தருளும்; பாவநாசதீர்த்தமானவை குற்றமில்லாதமுனிவர்களாற் சபிக்கப்பட்ட சாபங்களை விமோசனஞ்செய்து சகல புண்ணியார்த்தங்களைக் கொடுத்தருளும்; கந்தபுட்கரணி தீர்த்தமானவைசந்திரசேகரசடாதரனது திருவடியைமுடிமிசைசூடும் பக்குவத்தைக்கொடுத்தருளும்;

கங்காதீர்த்தமானவை முத்திக்கேதுவாய்தரிசித்துப் போற்றுவார் ஜெனனமாகியபிறவிக்கடலைக்கடக்குந் தெப்பம்போன்றிருக்கும் சேதுதீர்த்தமானவை சகலபாகத்தினின்றுநீக்கி நன்மையைக் கொடுத்தருளும்; கந்தமாதனதீர்த்தமானவை பாவங்களைப்போக்கி பரிசுத்தத்தைக் கொடுத்தருளும்; மாதுருதீர்த்தமானவை அன்னையைப்போற்ற ஆசீர்வதித்திலும், பதின்மடங்கதிகமானபலனைக்கொடுத்தருளும், தென்புலத்தார்தீர்த்தமானவை ஒருதரமூழ்கி எள்ளுந்தண்ணீரும் இறைத்தவர்களுக்குஇம்மை,மறுமையுஞ்சிறந்து விளங்கப் பரமன் குமரன்றிருவருட்சுரந்து வாழும் பதத்தைக்கொடுத்தருளும். இங்ஙனஞ்சொல்லப்பட்ட இருபத்திநான்கு தீர்த்தங்களின் மகிமைகளைக்கேட்டநைமிசாரணியவாசிகள் ஆனந்தங்கொள்ளப் பின்னுஞ் செல்வதாகினர்

மூன்றுவது

செயந்திபுர வைபவச்சருக்கம் முற்றிற்று.

---

நான்காவது

## சுவாமி திருவவதாரச்சருக்கம்.

---

ஐந்தருக்கரசனுகிய இந்திரன்முதலிய தேவர்களும், அசுரேந்திரனுகிய சூரபன்மன்செய்யுங் கொடுமைக்காற்றுதவராய் வண்டினந்துவைக்க, மலர்மதுவடிக்கும்பசிய தழைகளையுடைய பூங்காவனந்திகழ், கைலயங்கிரிச்சாரலிற் றவஞ்செய்திடுகச்செஞ்சடாதரன் சிந்தைமகிழ்ந்தங்ஙனமடைந்து அஞ்சிடேலெனவாக்களித்துச்சென்று, உமாதேவியுடன் மகிழ்வுற்றுலவுங்கால், இந்திரன்முதலிய வானவர்களுந் தோத்திரஞ்செய்துநிற்க, தேவர்கள் துயரநீக்க ஈசன்றிருவுளநினைந்தமாத்திரம் பரசிவத்தினுடைய நெற்றிக்கண்களினின்று தீப்பொறிகள்சிந்தி ஆறுபொறிகளாகின. அதனைவாயுதேவனையும், அக்கினிதேவனையுங், கங்கையிற்கொண்டுவிடும்படி ஆக்யாபித்தனர். அவ்விருவருங்கொண்டு கங்கையில்விடுகக் கங்கையானதேந்திச்சென்று செழுங்கநீர்ப்பு

ட்பம் தினமூன்றுபுட்பிக்கும் சரவணப்பொய்கையின்கமலத்தின்
மீது சேர்த்தன. உடனே அப்பொறிகளாறுந் தனித்தனி திவ்ய
தேசோன்மயமாகிய ஆறுகுழந்தைகளாகப் பிரகாசிக்கவுந் தேற்
வர்கள்கண்டு சந்தோஷங்கொண்டு பாரிஜாதமலர்களைத்தூவி கார்
த்திகைப்பெண்களாகிய அறுவரைகொண்டமுதளித்துக் காத்
துவருங்கால், ஈஸ்வரனீஸ்வரியுடன் ரிடபவாகனத்தெழுந்து சர
வணப்பொய்கையடைந்து ஆறுகுழந்தைகளையும் அம்பிகையதிக
ஆவலுடன் சேர்த்தெடுக்க ஆறுகுழந்தைகளு மோருருவடைய
க்கொங்கையினமுதளித்து கந்தனென்றுபெயரிட்டுக் கைலையங்
கிரியையடைந்து போற்றிவர நம்பெருமானாகிய முருகன் அறு
பத்திநான்கு கலைகளையும் ஓதாதுணர்ந்து வீரவாகுவுடன் நவவீ
ரர்களும் இலக்ஷம்வீரர்களுந் துணைவர்களாகவரச்சென்று சூர
பன்மன்முதலாகிய அசுரர்களை வேலாயுதத்திற் கிரையாக்கித்
தேவர்களுடையத் துயரைநீக்கி வாழ்வுமரசுந்தந்து தேவேந்தி
ரன் புத்திரியாகிய தெய்வகுஞ்சரியைத் திருமணம்புரிந்து களி
கூர்ந்தபின் இந்திரன்முதலிய சகலதேவர்களையும் குமரன்றிருக்
கண்ணருளி இப் பரதகண்டத்திற் கடற்சிறப்பும் மலைச்சிறப்
பும் நதிச்சிறப்பும் நெருங்கிச்சிறந்து விளங்குகின்ற திவ்ய க்ஷே
த்திரமுளதாயின் அத்தலத்தினுமிருந்து வாசஞ்செய்தற் கோக்
கியமாமெனத் திருவாய்மலர்ந்தருளகத் தேவர்கள் மகிழ்ந்து
நங்குகப்பெருமானுக்கிதனைச் சொல்வதாகினர்.

---



நான்காவது

## சுவாமி திருவவதாரச்சருக்கம் முற்றிற்று.

ஐந்தாவது

## செயந்திராபுரச்சருக்கம்.

---

மஞ்சுலாவிய கந்தமாதன சுந்தரமதனை எந்தையே சொல்
லற் கெளிதோ கந்தனேயுந்தன் கிருபாநோக்கத் திருவருட்சுரக்
கச் சிந்தையுவந்தனம் அச்சந்தனுசலமெனும் பருவதமானவை

மற்ற கிரிகளின் முடிமிசைசூடிய மலர் நிகர்த்தொளிரவும். செந்திருவனப்பைச்சேர்மதிவதன கந்தர்வமாதர்வந்து நிர்த்தனஞ் செய் நந்தனசசோலை மஞ்ஞைகள்கூட மாங்குயிற்பாட வண்டினமது வுண்டின்னிசையூத மந்திகள் குந்திமத்தளங்கொட்டவும், அன்னங்கள் கண்டு நன்னடைபயில, மின்னற்கோடிநேர் கன்னியரான தேவநங்கையரைத் தொடரவும், செங்காந்தட்குரா கடப்பமலருஞ் சந்தன குங்குமவல்லிக்கொடியும் பல மணிக்குவியல்களும் தாங்கியதன்மையாற் குமாரக்கடவுளே உமைகுச் சமானமாயுமிருக்கின்றது. இன்னும் பலவளப்பங்களையுடைய கந்தமாதன மலையின்பாங்கர் மேவுங்கடலானவை ஆயிரத்தெட்டண்டங்களையும் அரசுபுரிந்த சூரபன் மனையோர் மாமாவடிவமாகத் தாங்கிநிற்கு மாயின் அதன் பெருமையைச் சொல்லற்பாங்கதோ; அன்றியுங் கந்தமாதனத்தின் வடபாகத்தில்வருகின்ற தாம்பிரவன்னிந்தியானவை கைலையங்கிரியிலிருந்து சிவபிரான் திருமணஞ்செய்ய எழுந்தருளுங்காலையில் அன்னவர் கட்டளையின்படி அகத்தியமாமுனிவர் கமண்டத்திலே கொணர்ந்து பொதியமலையிலேயிருந்து வரவிடுத்த மகாபுண்ணிய நதியாம். அதனில் தேவர்முனிவருாகர்களுந் தீர்த்தமாடுவார். ஆகையின் அதன் மகிமையைச் சுருக்கிச்சொல்வோமாகினுமுடியா. இவ்விதமலைவளமுங் கடல் வளமும் நதிவளமும் பொருந்திய இடத்திலே செயந்திபுரமெனுந்தலமிருக்கின்றன அத்தலம் தானம் தவம் செய்தற்கேற்றதாயும் அநேகபுண்ணிய தீர்த்தங்கள் சூழ்ந்ததாயும் கல்விப்பொருள்செல்வப்பொருள்மலிந்ததாயும் உத்தமகுணஞ்சத்தியசிந்தைகுலாசாரந்தவராதவரான நான்கு வருணத்தார்களும் வசிப்பெற்றதாயும்பிரகாசிக்கின்றன அதனைத் தாங்களெழுந்து திருக்கண்ணோக்கின் தெரியலாமென தேவர்களொருவர் சுருக்கிச்சொல்லக் கந்தனுங்கேட்டுச் சிந்தைமகிழ்ந்து அருகிருந்த வீரவாகுதேவரையும் பூதகணங்களையும் நவவீரர்முதலிய இலட்சம் வீரர்களையும் பிரயாணப்படுத்தித் தானும் வாயுதேவன் நடாத்துகின்ற தேரின்மீ தாரோகணித்து தேவர்முனிவர் சித்தர் முதலியோர் சூழ்ந்துவர விண்ணவர் கற்பகமலர்தூவ நாரதர் கின்னரர் தும்புருவர் வீணைக்கியானஞ்செய்க நடன மாதர்கள் நிர்த்தனஞ்செய்க சகலவாச்சிய

ங்களுமுழங்கத் திருச்செந்தூர்ப் பதியைச்சேர்ந்து மகா உன்னதமாகிய பொற்கோபுரமதியற்றி சுப முகூர்த்தத்தில் தெய்வயானையும், வீரவாகுமுதலிய துணைவர்களும், தேவர் மூவர்முதலிய யாவர்களுஞ் சூழ்ந்துவர கோயிலுட் சென்று சித்திராசனத்திலிருந்தார். அதன்பின் யாவர்களுக்கும் சகலவரங்களுங் கொடுத்து தங்கள் தங்கள் பதிகளுக்கனுப்பி, தன்னை தெய்வயானையுந் துணைவர்களும் மகிழ்ந்துபோற்ற உலகத்தை இரட்சித்திருந்தனர்.

ஐந்தாவது செயந்திபுரச்சருக்கம் முற்றிற்று.

ஆறாவது

## வள்ளியம்மை திருவவதாரச்சருக்கம்.

கடம்பமாலையைத்தரித்த முருகபிரான், மேற்கூறிய வண்ணம் எழுந்தருளி உலகத்தை இரட்சித்திடுங்கால் பொன்மயமாகிய கைலையங்கிரிச்சாரலில் ஏமனென்னுமுனிவர் வண்டினமனூவுண்டின்னிசை பயிலுந் துளபமாலையைத் தரித்தச்செந்திருமார்பனைத் திருவுளத்திருத்தி யோகத்திருந்ததைக்கண்ட இந்திரன் மனம் பொராது, யாழிசை பாடுகின்ற கந்தருவர்களையும் நடனமாதர்களையும், ஏமகூடரிடஞ்சென் றங்கவர் யோகத்தைப் பங்கஞ்செய் கிங்கடைகுவீரென்றேவ, அன்னவர் சென்றம்முனிவர்முன் வீணையை மீட்டி வீணைக்கிணங்க பாடலாடல் முதலிய விநோதங்களைச் செய்க, அவ்விசையாகிய வமுதஞ் செவியிற்புகவே முனிவர் யோகந்தவிர்த்துக் கண்ணைவிழித்துச் சினந்தவராய்க் கந்தர்வர்களை வில்லியராகவும் நடனஸ்திரிகளை வில்லியப்பெண்களாகவும் பூவுலகில் செனிக்கக் கடவீர்களெனச் சபித்தனர். அக்கொடிய சாபத்தையடைந்த கந்தருவர்களும் நடனமாதர்களும் அஞ்சினவர்களாய் எமதையனே! இச்சாபத்தை நீக்கியருளவேண்டுமெனப் போற்றிநிற்க முனிவரானவரிதனைச் சொல்வதாகினர். எனது யோகத்தைக் கெடுக்க பெத்தனித்தமையா லுங்கட்சிச்சாப நேர்ந்தன ; ஆகினும் இன்னஞ் சிலகாலத்திற் குமரகுருபரனால்விமோசனமாம், நடவுங்களென

அச்சாபத்தைபெற் றவைர்களும் வெள்ளிமலைச்சாரலில்வேடர் குழாங்களாயுற்பவித்து மேபாடியெனும் நகரத்தினை கந்தர்வர் களுக் கதிபனானவன் நம்பிராஜனாயவதரித்து அரசுரிமை நடா த்திவருங்கால் அவ்வெள்ளிமலைச்சாரலில் பசியதழைகளையுடை யப் பூஞ்சோலையின்கண் சிவமுனிவரென்பவர் தவஞ்செய்திருக் கப் பொன்னுங்காணியெனும் பெண்ணரசி மானுருக்கொண்டு முனிவரின் முன்னர்வருக அஃதின் குறிப்பறிந்த யோகியும் கலையினுருக்கொண்டு அம்மானுடன்கூடக்கெ ற்பமுற்றதையறிந்த மர்துசிரோண்மணியாகியசுந்தரிமிகவுமான ந்தங்கொண்டு மான்வயற்றிற்றங்கினவுடனே இருடிபிண்டமிரா த்தங்காதென்ப அம்மானனவை வேட்குமரியர் வள்ளிக்கிழங் கொடுத்தபள்ளத்திற் செம்மணி நிகர்ப்ப பெண்மணியையீன்று சென்றன. அம்மகவை வேடர் கண்டெடுத்துத் தமது குலாதி பனாகிய நம்பிமன்னனிடங்கொடுக்க அன்னவன்மிகவுமானந்தங் கொண்டு வள்ளியெனப்பெயரிட்டுவளர்த்துவருங்கால்மடந்தைப் பருவஞ்சென்று மங்கைப்பருவமடைந்து கன்னியர்சூழத் தூண் டாவிளக்கெனத் தன்னொளிவிளங்கத் தினைப்புனக்காவல்புரிந்து புள்ளினங்கள் அந்தரத்திருந்து வந்திறங்காது கவண்கல்லெறிந் து பாதுகாத்திருந்தனள்.

ஆறாவது

வள்ளியம்மை திருவவதாரச்சருக்க முற்றிற்று.

---

ஏழாவது

## திருமணச்சருக்க.

---

மேற்கூறியபடி வள்ளியம்மையுந் தினைப்புனக்காவல்புரிந்தி ருக்க தண்டுகமண்டல கரதலவீணைக்கியானியாகிய நாரதமகரிஷி யானவர் பொதிகாசலத்திற்கேகி மீண்டகாலத்திற்வள்ளியைக்க ண்ணுற்று வடிவேலன் பெருமைகளைப்புகன்று, கந்தனை மணப்பா

யெனக் குறமின் அவ்வார்த்தைக்கிணங்காததனைத் தெரிந்த நாரதன் கந்தனையடுத்துவள்ளியைக்கண்டுவந்ததைச்செப்பவடிவேலனும் வேடருருவமைந்துதினைப்புனஞ்சென்றுவள்ளியைக்கண்டு சாலஞ்செய்து தனது பெண்டனக் கொண்டுவருங்கால் வேடர்கண்டெதிர்க்கக் கந்தன் மாயாசக்தியால் வேடர்குலாதிபனை மயக்கி காக்ஷியுந் தருகக்குறவர்கோன்பணிந்து வள்ளியைக்கொடுக்கச்சிந்தையுவந்து தனது பதியினை பச்சை வச்சிரமுத்தினங்களால் உச்சிதமாகியகாவணங்களுயர்த்தி வாழை, கமுகுமுதலிய தோரணங்கள் நாட்டி மலர்மாலைச்சூட்டி மணப்பீடமதியற்றி எங்கனுந் தீபசோதிகளையேற்றிப் பொன்னுதகந்தனக் குன்னிதமாக நகர்லங்கர்ரந்துலங்கச்செய்து நல்ல சுபமுகூர்த்தத்தில் பிரமன் விஷ்ணுருத்திரனுடன் சகல தேவர்களும் கோமகள் நாமகள் பூமகளுடன் தேவநங்கையருங்கூடகந்தருவமாதர்கள் மங்களம்பாடநடனரம்பையர்களாட வேடருக்குமரியர்வெண்சாமரம் போட வேதரிஷிகளோமம்வளர்க்கபெண்ணும்பிள்ளையும்அலங்காரபூசிதர்களாய் மணப்பீடத்திருக்க வாத்தியக்கருவிகள்முழங்க் தேவதுந்துமிகளார்ப்ப தேவநங்கையர் சேஷகளிறைக்க மிகு வைபவத்துடன் நமதுபெருமானாகிய முருகன்வள்ளிகந்தரத்தில் மங்கிலியஞ்சூட்டி வேதச்சடங்கனைத்தும் பூர்த்திசெய்து ஊர்வலம்வந்து அனைவர்களுக்குங் காமதேனுவைகொண்டறுசுவையோடமுதளித்து கந்தகஸ்தூரி அடைக்காய்மலரும் வளங்கிதேவர்முதலிய யாவரையு மவரவர்பதிகளுக்கனுப்பி வேடர்களுடைய சாபத்தைநீக்கிக் கந்தனும் வள்ளியுங்கலந்து பெருமையாகிய இன்பமதடைந்து அடங்காப்பரவசராய் இரத்தினகசிதாதத்தின் மீதெழுந்து சகலவாத்தியங்களுஞ் சப்திக்கச் செந்தூர் நாடிச் செவ்வேள்வருக தெய்வயானையம்மையார் முருகன் வள்ளியைத் தேடிச்சென்றமுதற் பரமனைக்கோரித்தவஞ்செய்கப்பரமன் அவ்வம்மையார்கருத்திற்கேற்பக் கந்தமாதனமெனுஞ் சந்தனசலத்தின்கண் சிவலிங்கசொரூபமாகத் தோற்றினர்; அஃதுணர்ந்த தெய்வயானையம்மையார் மகிழ்வடைந்து தோத்திரஞ்செய்துநிற்கமுன்னர்தனது நாயகன் வருகக்கண்டு ஆனந்தப்பரவசளாயிரு கரங்களையுஞ் சிறமேற்கூப்பி நமஸ்கரிக்கின்றதெய்வயானையைமு

ருகப்பெருமான் இரண்டுகரங்களாலுமெடுத்தணைத்து இரதத்தின் மீதமர்த்திக்கொண்டு ஆலயஞ்சேர்ந்து வள்ளியம்மை தெய்வயானைசமேதராய் அடங்காப்பெரும் இன்பமதடைந்துதெய்வயானைக்காக வெழுந்தருளியிருக்கும் இலிங்காகார சொரூபந்தனதுபிதாவென்றறிந்து ஞான சிந்தையாற் பூசித்தனர். அப்பால் சனகர்முதலாகிய சிறந்த முனிவர்களுந் திரிசுதந்தரருமுறை முறையாக அவ்விருவரையும் பூசித்துவந்தனர். இவ்விதமாகப் பூசிக்கும் அன்பர்களுடைய துன்பத்தைநீக்கி இன்பமதருளிசெயந்திமாநகரத்திலே சண்முகமூர்த்தி விளங்கியிருந்தனர்.

ஏழாவது

திருமணச்சருக்கம் முற்றிற்று.

---

எட்டாவது

## பிரமன் வரம்பெருச் சருக்கம்.

---

தேவாகமசாஸ்திரங்களுக் கிருப்பிடம் போன்ற மனத்தரான வியாசமுனிவருடைய திருவடிகளைச் சுகமுனிவர் சிரமேற்கொண்டு செந்தாமரைமலரில் வீற்றிருக்கிற பிரமன் வணங்கச் சோதி சொரூபக் கந்தன் வரங்கொடுத்தச் சரிதத்தை யுரைத்தருளவேண்டுமென வியாசர் சொல்வதாகினர்; கேளும் சுகப் பிர்மனே, மகா மகிமைகளுடன் பிரகாசிக்கின்ற செயந்திமாநகரத்திலெழுந்தருளியிருக்கின்ற குமாரக்கடவுள் திரிசுதந்தரர்களை நோக்கி ஓ! மறையவர்களே இத்தலத்திலிருந்து அன்றன்றலரும்படியான சுகந்த புட்பங்களையெடுத்து நம்மையருசசித்து நமது நாமங்களைத் தோத்திரஞ்செய்து. பக்கத்திருங்கள் இச்சிந்து புரமானவை மோக்ஷத்தைக்கொடுக்குமென் றருளியவர்களுக்கு பிரமன்கதையைச் சொல்வதாகினர். கேளுங்கள் வேதோத்தமர்களே பிரமனொருகாலத்திற் பரசிவத்தை இகழ்ந்ததையறிந்த பரமன் வயிரவமூர்த்தியை அனுப்பி பிரமனுடைய

ஐந்து சிரங்களிலொன்றைக் கொடுவாவென அன்னவர்சென்றத் தன்மையேகொண்டுவருக பிரமன் புலம்பித் திருமாலிடஞ்சென்று முறையிட விஷ்ணு பிரமனைத் தேற்றி சரணேற்பவன் மந்திரத்தையுபதேசித்துத் தவஞ்செய்வாயென அவ்வாறே சடாக்ஷரத்தையுச்சரித்து பிரமன் கொடியதவஞ் செய்திருக்கக் கந்தன் முன்னர்வருகச் சிந்தைமகிழ்ந்து பலவாருகத்துதித்துத் தனது குறையைத் தெரிவிக்க முருகன் கிருபை கூர்ந்து நமது தெய்வகுஞ்சரிக்காகக் கந்தமாதனத்தின் கண்ணெழுந்தருளிய சிவலிங்கத்தைப் பூசிப்பாயென பஞ்சாக்கரத்தையுபதேசித்துச் சென்றனர். அவ்வாறே பிரமன் ஆத்தி, மா, முட்கிளுவை, முல்லை வில்வமெனும் பஞ்சபல்லவங்களாற் சிவலிங்கத்தைப் பூசித்திருக்கப் பரமன் மனதுவந்து பிரசன்னமாகக்கண்ட பிரமன் அநேகவிதமாகப்போற்றி உம்மாற்கிள்ளப்பட்டச் சிரத்தைக்கொடுத்தருளவேண்டுமென்ப் பிரார்த்திக்கப் பரமன்றிருவருட்சுரந்து சொல்வதாகினர். ஓ! பிரமனே திருச்செந்தூர்ப் பதியின்கண் முகாரம்பதீர்த்தத்திலே மூழ்கி முருகனை மும்முறை வலம்வந்து விமானவடிவமாய்ப் பிரகாசித்திருப்பையேல் இழந்த சிரத்தைமறுபடியும் பெருவாயென்றுக்யாபித்துச் சிவலிங்கத்துள் மறைந்தனர். அவ்வாறே பிரமன் தினந்தோறும்முகாரம்பதீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து விமானவடிவமாய்க் கந்தக் கடவுளைத் தோத்திரஞ் செய்திருந்தார்.

இவ்வித மகத்துவம்பொருந்திய வதனாரம்பதீர்த்தத்திலே நடந்த இன்னோர் சரிதையைக் கேட்பீரெனச் சொல்வதாகினர். சகல செல்வங்களையும்பெற்ற கலிங்கதேசத்தரசன் குமாரத்தி கனகசுந்தரி அன்னமென்ன நன்னடைநடந்து அகத்தியமுனிவர் பொதிகமலைச்சாரலிலே தாம்பிரபருணி நதிமூலத்தில் ஸ்நானஞ் செய்யவந்தவள் ஆங்கு அரியதவத்திருந்த அயக்ரீவமுனிவனைப் பார்த்துக் கனகசுந்தரி அவமதித்துச்சிரித்தனள் அவனதுகண்டு கோபித்து அவளை நீயினிவரும் ஜெனனத்திலே பரிவதனத்தையடையக்கடவாயெனச்சபித்தனன், உடனேயவள் அச்சாபத்தைக்கேட்டுமனநொந்துமுனிவனைத்தோத்திரஞ்செய்து சுவாமிஇக் கொடியசாபமிமக்காலத்தில் விமோசனமாமென முனிவன் யோ

சனை புரிந்து திருச்செந்தூர்ப்பதியின்கண் முகாரம்பதீர்த்தத்தி லேமுழ்கினுற் குதிரையின்முகமாறிமனிதமுகமடைகுவாயென் ருன். அதன்பின் கனககுந்தரி மறுஜென்மத்திலே மதுராபுரிநகர த்தையரசுரிமைநடாத்திவந்த உக்கிரப்பெருவழுதியெனும் அர சனுக்குப் புத்திரியாகப்பிறந்தனள். பிறந்தபோதுமிகுந்த அழ கோடுகூடி விளங்கியதால் அங்கசுந்தரியெனப் பெயர்பெற்றிரு ந்து முனிவன் சாபத்தால் குதிரைமுகமடைந்தனள். அதுகண்டு பிதாவாகிய பாண்டியன் சஞ்சலப்படுங்கால் அசரீரியாக ஓ ராஜ னே! திருச்செந்தூர்பதியின்கண் முகாரம்பதீர்த்தத்திலே ஸ்நா னஞ்செய்து கந்தக்கடவுளை வலம்வரில் உன்குமாரத்தியின்குதி ரைமுகமாறி மனிதமுகம்வருமென அவ்வாறே அங்கசுந்தரியு டன்சென்று வதனாரம்பதீர்த்தத்திலேமூழ்கி நம்மை யர்ச்சனை புரிந்து மும்முறை வலம்வருக அங்கசுந்தரியின்குதிரைமுகமாறி மானிடமுகமடைந்தனள் அதுகண்டு தந்தையு மற்றவர்களுஞ் சிந்தைகளித்துத் தமது பதிக்குச்சென்றனர். அப்பேற்பட்ட மகத்துவமுடைய தீர்த்தமென்று திரிசுதந்தரர்களுக்குச்சொன் னரெனச்சொல்கவும். வியாசரை சுகமுனிவர் பணிந்து திரிசுத ந்தரர்வரலாற்றையு முரைத்தருள வேண்டுமெனக் கேட்டுக் கொண்டனர்.

எட்டாவது

பிரமன் வரப்பெருச்சருக்கம் முற்றிற்று.

---

ஒன்பதாவது

## திரிசுதந்தரர்ச் சருக்கம்.

---

கேளும் சுகப்பிர்மனே சந்திரசேகரன் சடாமகுடத்துலவி இப்பூதலத்திலங்குங்கங்காநதி தீரத்திலேதவஞ்செய்யு முனிவர் கள் வேதங்களைனுங் கனியின் அமுதைநுகர்ந்து மகிழ்வாக ஓ தல்ஓதுவித்தல்வேட்டல் வேட்பித்தல்ஈதல்ஏற்றலென்னும்ஆறு கருமங்களையுமுடையவர்கள். ஆறுகுற்றங்களினின்றுயர்ந்தவர்

கள். இவர்கள் கமலப்போதனுகிய பிரமனைக்கோரித்தவஞ்செய்த, நான்முகனவர்கள் முன்னர்தோன்றி நீங்கள் செய்த தவத்திற்கு மகிழ்ந்தனம். யாதுவரம்வேண்டுமென முனிவர்கள் வெண்டாமரையாள் மணுளனேஎங்களெண்ணத்தைத்தெரியப்படுத்துகின்றேம். பூமி சுவர்க்கம் சத்தியமெனு மூவுலகங்களினுஞ்சென்று வசிப்பதற்கு இச்சினத்தனம். ஆகையால்எங்கள்கோரிக்கை யிடையூறின்றி நிரைவேறும் வரத்தைக்கொடுத்தருளவேண்டுமெனப் பிருர்த்திக்க பிரமன் அவ்வாறே வரமருளிச்செல அம்முனிவர்கள் பின்பு சிவபிரானையும் திருமாலையும் நோக்கித்தவஞ்செய்து அவர்களிடத்திலும் மேற்கூறிய மூன்றுலகங்களிலும் வசிக்கும்படியான வரத்தைப்பெற்றமையால் அவர்களுக்குத் திரிலோக சுதந்தரரென்றுபெயர். தற்காலந்திரிசுந்தரரெனவிளங்குகின்றன ரெனச்சொல்லியவியாசரை சுகமுனிவர் துதித்து அவர்களின்ருகை யெவ்வளவென்றுகேட்கலும் வியாசர்சொல்லுவார். மேலே பெற்றவரத்தினுல் திரிலோகங்களிலுஞ்சென்று வசித்து அதன்பின் தாம்பிரபருணி நதிக்கரையைச் சேர்ந்து பெரிய யாகங்களைச்செய்து இல்லறதருமம் வழுவாது வாழ்ந்தனர். அவர்களில் ஆயிரம்பேர் விருத்தாஜலத்திலேபோய் வேதவிதிப்படி சிவபிரானைப்பூசித்திருந்தனர். இரண்டாயிரம்பேர்கள் திருச்செந்தூர்த் தலத்தில் சண்முகப்பெருமானை யர்ச்சித்திருந்தனர். சீர்வளரும் சிதம்பரத்தில் மூவாயிரம்பேர் சென்று நடராஜனைப் பூசித்திருந்தனர். கமலாசனபுரத்தில் நாலாயிரம்பேர் சென்று திருமாலைப்பூசித்திருந்தனர். திருவண்ணுமலையிலே ஐயாயிரம் பேர் சென்று சிவபிரானை பூசித்து இனிமையாக வாழ்ந்தனர். ஜகநாதத்திலே ஆறுயிரம்பேர் சென்று துளபமாலையணிந்தவிஷ்ணுவை பூசித்திருந்தனர். திருவீழிமிழலையிலே ஏழாயிரம்பேர் சென்று உமாபதியைப் பூசித்திருந்தனர். மதுரையிலே எண்ணுயிரம்பேர் சென்று சந்திரசேகரசுந்தரமூர்த்தியை பூசித்திருந்தனர். தண்டகவனத்திலே ஒன்பதினுயிரம்பேர்சென்றுஇராமனுடைய பாதமலரை பூசித்திருந்தனர். கோகுலத்திலே பதினுயிரம்பேர் பிறந்து திருமாலின் பாதமலரைத் தொழுதிருந்தனர் வெதிரிகாச்சிரமத்திலே பதினோராயிரவர் சென்றுநாராயணனைப் பூசித்திருந்தனர். சுவாமிமலையிலே பன்னீராயிரவர் சென்று

வேலேந்திய திருக்கரத்தையுடைய முருகபிரான் திருவடித்தாமரைகளைப் பூசித்திருந்தனர். இம்முறை திரிசுதந்தார் எழுபத்தெண்ணாயிரம்பேர்களும் சமுத்திரஞ்சூழ்ந்த உலகத்திலே ஆங்காங்கு தவஞ்செய்திருந்தனர். இவர்களை நற்குணத்தூடன் றுதித்தவர்கள் திரிமூர்த்திகளையுந் துதித்தப் பேற்றினையடைகின்றாரெனவருளிச் செய்தனர்.

ஒன்பதாவது.

திரிசுதந்தரர்ச் சருக்கம் முற்றிற்று

---

பத்தாவது

## மாதபூஷணைச் சருக்கம்.

---

பரிசுத்தமாகி இருதயகமலத்திற் சொல்லற்கரிய வேதங்களே குடிகொண்டிருக்கிற தவசிரேஷ்டர்களாகிய இரண்டாயிரந் திரிசுதந்தரர்களுஞ் சிந்துபுரத்தில் வந்தணையாகக் கந்தங்கடவுளின் செந்தாமரைநிகர்செய்ய பொற்பதத்தைத் தூய்ய நன்மலரால் நித்தியமர்ச்சித் தினிமையேகுடிகொண் டெங்குமுளவர் நன்குமதிக்க வேலனருள்பெற்று விளங்கியிருந்தனர் அன்றியும் கார்த்திகைமாசக் கிர்த்திகையன்று வதனாரம்பதீர்த்தத்திற் படிந்துள்ளன்புடன் குமரன்பதத்தை சிந்திப்பவர் இம்மை மறுமைச்செல்வத்தினையும் மாதந்தோறும்வருகின்ற கார்த்திகை நட்சத்திரத்தன்று முகாரம்பத்திலேபடிந்து முருகனைப்போற்றுவோர் பெருகும்பலனைப் புகலத் தரமன்று ; மாசிமாதத்திலொருமுறையேனும் வதனாரம்பத்திலுங் கந்தபுட்கரணியிலுமூழ்கிக் கந்தனை வந்திப்போர் சனனவேதனையினின்று நீங்கியும் சித்திரைமாத முப்பதுநாளும வதனாரம்பதீர்த்தத்திலேபடிந்துவேலாயுதனைப்போற்றுவர் மோக்ஷத்தையும் தெட்சணையனம் உத்தராயணத்தன்று கந்தபுட்கரணியிலும் முகாரம்பத்திலும் மூழ்கி சம்பாவன்னம் சண்முகமூர்த்திக்கு நிவேதனஞ்செய்தவர் மேலான யாகபலத்தையும் ஆடிமாதமுப்பதுநாளும் பசுவின் தந்

யோதனத்தை குமரனுக்கு நிவேதனஞ்செய்பவர் அப்பெருமான் திருவடித்தாமரையையும் ஆவணிமாத முப்பதுநாளும் வேத விதிப்படி ஆறுமுகனைப் போற்றுவர் நூறுயாகஞ்செய்த பலத்தினையும், புரட்டாசி மாதம் மாளயபக்ஷத்தன்று முகாரம்ப தீர்த் தத்திற்படிந்து சிரார்த்தஞ்செய்தவர் பிதிர்க்களெல்லாம் சத்தியலோகத்தையும், ஐப்பசி மார்கழிமாதத்தில் ததியோதனம் குமரனுக்குப்படைத்தவர் மோக்ஷலோகத்தையும், தைமாசமுப்பதுதினமும் கோயில்முழுதும் அகிற்புகையினுற் வாசிக்கச்செய்தவர் குலத்தினரெல்லாம் சிவபிரான் திருவடியையுங்கிர்த்திகை நட்சத்திரத்தில் நெல்லியிலையினுல் முருகக்கடவுளை யர்ச்சித்தவர் ஒவ்வோரிலைக்கும் ஒவ்வொரு யாகப்பலனையும் பெற்றுனந்தமாக வாழ்ந்திருப்பரென வேதங்களே முறையிடுகின்றன.

பத்தாவது

மாதபூஷனைச்சருக்கம் முற்றிற்று.

---

பதினோராவது

## விசுவரூபச் சருக்கம்.

---

வேதாகமங்களை யாருய்ந்து சிவந்த மனத்தினராகியசுகப்பிரமனை நோக்கி வியாசமுனிவர் பின்னுஞ் சொல்வதாகினர். கேளும் சுகபிர்மனே பிரணவ சொரூபராகிய குமரன் வள்ளியை மணந்து வந்தபின் வீரபாகுதேவர் கந்தன் பதத்தை வந்தனை செய்து தமது திருக்கோலக்காக்ஷியை யெவ்விடத்துமாக அடியேன் றரிசித்துப் போற்றும்படி விசுவரூபத்தைக் காண்பித்துத் தரிசனந் தந்தருள வேண்டுமெனப் போற்றிநிற்கக் கந்தனுஞ் சிந்தை மகிழ்ந்து எல்லாப்பொருள்களுந் தானுமெனவிசுவரூபங் கொண்டுநின்றனர் அக்கருணைதேங்கிய விசுவரூபத்தை வீரவாகுதேவர் தரிசித்து இருகரங்களைச் சிரமேற்கூப்பி ஆனந்தக் கடலிலாழ்ந்து தோத்திரஞ்செய்வதாகினர்; எப்பொருட்குமூலாதாரமான குருமூர்த்தமேயுமது விசுபரூபத்திலே யண்டரண்ட

புவனங்களும் சப்தமென்றுசொல்கின்ற சாகரங்களும், மேகங்களும், மண்டலங்களும், புரிகளும், தீவுகளும், ரிஷிகளும், மலைகளும், சிரஞ்சீவியர்களும், அஷ்டமென்று சொல்கின்ற திக்குப்பாலகரும், டிக்ஜங்களும், குலாசலபருவதங்களும், நாகங்களும், வசுக்களும், ஏகாதசருத்திரரும், துவாதசாதித்தர்களும், பிர்மா விஷ்ணு ருத்திரனும், முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிர இருடியர்களும்பதினெண்கணங்களும், நாற்பத்திரண்டுசத்திகளும், நவக்கிரகங்களும், இருபத்தேழு நட்சத்திரங்களுக்கதிபனான சந்திரனும், ஐம்பத்திமூன்று தீர்த்தங்களும், நான்குவேத ஆறுசாஸ்திர பதினென்புராணமிருபத்தெட்டாகமந் தொண்ணூற்றாறுதத்துவம் அறுபத்தினன்கு கலைக்ஞானங்களும், சாலோக சாமீப சாரூப் சாயுச்சியமாகிய நான்கு பதவிகளும் உமது திருவுருவத்திலே பிரகாசிக்கின்றன. உமது ஸ்ரீ விபூதியின் அருமை பெருமைகளை என்னொருநாவாலெடுத்துச் சொல்லுந்தரமன்று ஓ! வண்டுகள் மதுவுண் டின்னிசைபாடுகின்ற கடம்பமாலையைத் தரித்த கந்தனே; உமது விசுவரூபத்தை மறைத்தருளவேண்டுமெனக் குமரனும் அஞ்சேலென வீரவாகுதேவரை யாதரித்துத் தமது விசுவரூபத்தை யொழித்து முன்போல் ஆறுமுகத்துடன் பிரகாசித்திருந்தனர்.

பதினொருவது

விசுவரூபச் சருக்கம் முற்றிற்று.

பனிரண்டாவது

## சுவாமியின் பிரபாவச் சருக்கம்.

---

பாசமெனும் மாயையை நீக்கி ஞானமாகிய அமுதத்தாழ்ந்த சுகமுனியே நினைத்தற்கரிய விசுவரூபத்தை வீரவாகு தேவருடன் றேவர்களுந்தரிசித்தேகினர். அக்கணம்வீணாக்கியானியாகிய நாரதரும் தரிசித்து மேகத்தைக்கண்ட மஞ்ஞையைப்போல பரவசராய் பாற்கடற் சுவேததீவிடை விளங்குகின்ற வைகுந்தப்பட்டணத்தில் பச்சை வச்சிரத்தூண்கள் மொய்த்த ஆயிரக்கால் மண்டபத்தில் ஆயிரம் பணமகுடங்களையுடைய சேடன்மீது பூ

தேவி சிதேவி இருமருங்கினும் வளரச் சுனந்தன், விச்சுவசே
னன், கருடன், நந்தன், சனகாதிமுனிவர், கங்கை முதலிய நதி
மடந்தையர் கற்பகத்தரு காமதேனு தேவப்பெண்கள் அனுசந்
தர் முதலானவர்கள் வாயார வாழ்த்தித்துதித்து நீங்காமற்பணி
ந்து நிற்க அவர்களுக்கு ஞானமாகிய அமுதத்தை கொடுத்தரு
ளி யோக நித்திரை செய்திருக்கின்ற நாராயணன்முன்னே செ
ன்றனர். அதனை நாராயணனறிந்து ஓ முனிசிரேஷ்டரே நீவிர்
விருப்பத்துடன் இவடம் வந்தகாரியம் யாதென வினவி இரத்ன
மிழைத்த ஆசனத்திருத்தி முகமலர்ந்திருப்ப நாரதர் சொல்வ
தாகினர். சரவணப்பொய்கையில் அவதரித்தக் கந்தக்கடவுளர்
கொடிய சூரனை யன்னவன் கிளையுடன் வேலாயுதத்திற் கிறை
யாக்கி தெய்வகுஞ்சரியுடன் வள்ளிநாயகியை மணந்து பரதகண்
டமாகிய பாண்டிய நாட்டில் மந்தமாருதம் வந்துலவிடும் தென்
றிசையில் முத்தமிழ் வளரும் குளிர்ந்த தாம்பிரபருணி அழகு
ஞ்செழித்த திருச்செந்தூரிலெழுந்தருளிவீரவாகுதேவருக்காக
க்கொண்ட ஆனந்தமயமாகிய விசுவரூபக்காட்சியை தேவர்முனி
வர்களுடனே தரிசித்து ஆனந்தங்கொண்டு உள்ளத்தடங்காமு
றுவலை யும்மிடம் விண்டிட வந்தனன். நீர் பாரத யுத்தத்திலே
அருச்சுன ராஜனுக்காகக்கொண்ட உம்முடைய விசுவரூபத்தை
யும் தண்டகாரண்யத்திலே யுமது தோழனொருவன் பொருட்டு
மகர்மேருவை வில்லாகவுடைய பரமேசுரன்கொண்ட திருவடி
வையும் வெதிரிகாச்சிர மத்திலே நரநாராயணர்களாகிய இருவ
ருக்குங்காட்டிய காலக்கினி ருத்திரக்கடவுள்கொண்ட திருவு
ருவத்தையும் பிரமதேவன் சிருஷ்டித்தொழிற் செய்வதற்காகச்
சிவபிரான் மகாமேரு கிரியினிடத்துப் பூர்வகாலத்திற்கொண்ட
ஆனந்தத்திருக்கோலக்காட்சியையுங் கண்ணுற்று களிப்படை
ந்த எமக்கு மனம் வாக்குக் கெட்டாத குமரப்பெருமான் கொ
ண்ட காட்சியைப்போல மேற்சொல்லிய காட்சிகளெல்லாம் மகி
ழ்ச்சியை விளைவிக்காமையினல் உமதிடம் அந்த அற்புதத்தை
வசனிக்க வந்தனனென்னத் திருமால்புன்முறுவல்கொண்டு தத்து
வக்கடலை நீந்திய முனிவர்களுள் முதன்மை வாய்ந்த நாரதமகா
முனிவர்க் கிதனை போதிப்பதாகினர் நீர் தரிசனஞ்செய்த குமர

குருபரன் முகங்களாறுஞ் சிவபிரான் பஞ்சமுகமும் எனதொரு முகமுமாம். அவருடைய பன்னிருகைகளும் சிவபிரான் எட்டுக்கையுடன் எனது நான்கு கையுமாம்; வெற்றிபொருந்தும் சூலமும் எனது சக்கரமும் இரண்டு தலையுள வேலாயுதமாகிக் கந்தன் கரத்திருக்கின்றன. பரமேசுரனுடைய கலையாகிப்பெரிய வொளியா யென்னுடைய வலக்கண்ணினின்றுந் தோன்றும் பிரபஞ்சத்தை யுண்டுபண்ணுதற்கேதுவாகிய விட்சேபசத்தியே வள்ளிநாயகியாம். என்னுடைய வடிவமாக விளங்கிய சந்திரகலையே தெய்வத்தன்மையுடைத்தாகி யெனது இடக்கண்ணினின்றும் ஆனந்தமயமாகத் தோன்றும் ஆபரணசத்தியே தெய்வகுஞ்சரியம்மையாம் இவ்விருபெண்களும் குமரன்றனக்கு இச்சாசத்தி கிரியாசத்திகளாம். அவர் நாமங்களுக்குள் சுப்பிரமணியனென்று சொல்லப்படும் பெயர் மூன்று பதமாகும். அம்மூன்றினுள் நடுவிலுள்ளபதம் சிவபெருமானுகும். இறுதியிலுள்ளபதம் எனதுவடிவமாகும்; முதற்பதம் மற்றிரண்டையும் அபிக்கமாக ஒன்றுசேர்த்து நின்றதாம். ஆதலால் பரமேசனும் நானுமே மூன்றுலகமுந் தொழுதுவணங்கும் ஆதியந்தமில்லாத வஸ்துவே சுப்பிரமணிய கடவுளென நான்குவேதங்களுமுறையிடும்; அன்றியும் சரவணபவன் என்றுசொல்கின்ற மூன்றுபதங்களுக்குள் முதல்பதமாகிய சரமென்பது சயனமெனும் அணையாகும் இரண்டாவது பதமாகிய அணமென்பது நாரமென்பதாம் இந்த இரண்டுபதமுஞ்சேர நாராயணனென்றும் பொருளாகியது மூன்றாவது பதமாகிய பவனென்பது சிவபிரானும் ஆகிய இவ்விருபதங்களுஞ்சேர சரவணபவனெனப்படும்; ஆறெழுத்தின் மகிமையை ஆருந்தறிந்தால் சிவபிரானது மெனது வடிவமென்றேநான்குவேதங்களு முறையிடும்; குமரன் வளரும் அசலங்கடோறும் யானும் வாசமாம் பிரதமை துதிகைதிரிதிகை என்னு மூன்று திதிகளும் பூமிதேவி இலக்குமி பார்வதியெனுமூவர்களாம் சதுர்த்தி பஞ்சமி சஷ்டி எனுமூன்று திதிகளும் உருத்திரன் ஈசானன் சிவன் என்னுமூவருடைய கலைகளாம் இந்த ஆறுமே கார்த்திகை முதலிய ஆறு நக்ஷத்திரங்கள்வடிவமாம். ஆதலாலிந்த நக்ஷத்திர தினங்களிலே சிவபிரானும் நானு

னாகிய குமரனுக்குரித்தாகிய ஓமம் ஜெபம் உபவாசமுதலிய பூசனைகளை உள்ளன்புடன் புரிபவர் சிவவிரதங்களினும் விஷ்ணு விரதங்களினுமுள்ள பலன்களையெல்லாம் மொருங்கே யடைகுவார். பிரணவத்தின் அக்கரமாகிய அகரம் பிரமதேவனும் உகரம் நானும் மகரம் பரமேசுரனுமாம். இன்னும் உகாமே குமரனும் அகரம் தெய்வயானையும் மகரம் வள்ளிநாயகியுமாம். இவ்விரு பெண்களுடன் சரவணனும் அயிக்மாய்க்கலந்து ஒப்பற்ற ஓங்காரவடிவமாய்ப் பிரகாசிக்கின்றனரென்றுரைக்க நாரதமுனிவர்கேட்டு ஆனந்தப்பரவசமுற்று முருகனைக்கான விஷ்ணுவுடன் செயந்திமாநகரம்வருகக்கந்தனுங்கண்டு அன்னவர்க்குவேண்டிய உபசாரங்களுஞ்செய்கச்சிந்தைமகிழ்ந்து கந்தமாதனத்திலினிதாகவீற்றிருந்தனர். பிரமதேவனும்விமானவுருக்கொண்டு கந்தமாதனத்தின் உச்சியிலே யிருந்தான். சிவபிரானும் அற்புதத்துடனுலகமெல்லாம் இரட்சித்தருளி அங்கேயிருந்தனர். சந்தன விருக்ஷங்களையுடைய மலைச்சாரலிலே குமாரக்கடவுளிருந்து கந்தபுட்கரணியை மனதிற் கருதினர் வேண்டும் வரங்களைக் கொடுத்திருந்தனரென வியாசமுனிவர் கூறப் பிள்ளையாகிய சுகமுனிவர்கேட்டுக் குமரக்கடவுளைத் தியானித்திருந்தனர்.

பனிரண்டாவது

சுவாமியின் பிரபாவச்சருக்கம் முற்றிற்று.

---

பதிமூன்றாவது



# அயிராவதபூஷணைச்சருக்கம்.

---

இருக்குமுதலிய நான்குவேதங்களையுமுணர்ந்த சுகமுனியே இன்னுமோர்சரிதையை நுவல்கின்றேன் கேட்பாயெனச்செருக்குமிகுந்த மனத்தையுடையகொடிய அசுரகுழாங்களைவேரறுத்த காந்திதங்கிய வேலேந்திய சண்முகமூர்த்தியினிரண்டுதாமரைம

லர்போன்ற பாதங்களை மனதினிடமாய் தியானித்து மகிழ்ச்சி மேலிடப் புளங்காங்கிதங்கொண்டு சொல்வதாகினர். திரிகாலவர்த்தமானங்களைத்தெரிந்தவராயும; காமமுதலாகியகுற்றங்களைநீக்கினவராயும், சந்திரசடாதரனாகியசிவபெருமானுடைய அன்றலர்ந்த பதுமமலர்போன்ற பாதங்களைப் பரவுகின்றவருமாகிய துருவாசமாமுனியானவர் தேவர்கள் சஞ்சரிக்கும் ஆகாயமார்க்கமாக பிரமனுலகத்திற்கேகுங்கால், மத்தியிலோர் தேவப்பெண்ணானவள் வந்துவணங்கி மிகுந்தவாசனையுள்ள புட்பமாலையொன்றைக் கொடுத்தாள்; அவ்வழகிய புட்பங்களாற்றொடுத்தமாலையைக்கையிலேவாங்கி, நீண்டசடையிலும்முகத்திலும்மார்பினும்அணைத்து அதன் வாசனையைக் கண்டுமகிழ்ந்து அப்பால் செல்கையில் கற்பகக்காவுக்கரசனாகிய இந்திரன், நான்குகோடுடைய அயிராவதமெனும் பெயரைவாய்ந்த வெள்ளையானையின்மீதுப்வனிவரக் கண்டு மனமகிழ்ந்து தன் கையிலிருக்கின்ற பூந்தொடையினை இந்திரனுக்குக்கையுறையாகத் துருவாசமுனிவர் கொடுத்தருளினர் இந்திரன் அம்மாலையைப் பெற்றுத்தன் சிரசிற்சூடாமல்வெள்ளையானையின் மத்தகத்தில் வைத்தனன் அப்பூந்தொடையினை அவ்வானையானது கவர்ந்து கையாலுங் கொம்பினாலுஞ்சிதைத்து சிதறவீசின, அதனைக்கண்டதுருவாசமுனிவர் மிகுந்தகோபதீப்தராய் இந்திரனைநோக்கி அறிவில்லாதவனே யான்கொடுத்த பூந்தொடையினை பொன்னுலகாளுஞ் செருக்கினாலல்லவோ இவ்விதஞ்செய்தனை யாதலால் இப்பாதகம் உனதிடத்திருக்க, பதியும் வாழ்க்கையும் அசுரர்பங்காகி மும்மலம்நீங்காத சிறியோர்களைப் போற் றிரியக்கடவாயெனச் சபித்தனர் அச்சாபத்தைக்கேட்ட இந்திரன் நடுங்கிதேவரீர்இச்சாபத்தைநீக்கியருளவேண்டுமென க்கேட்க முனிவர்மனதிரங்கி இதனைச் சொல்வதாகினர். கேடுவருங்கால் கெடுமதிதோன்றுமென்ப நேர்ந்தன ஆகினும், காந்திதங்கிய வேலேந்தியகந்தன்வளரும் செந்தூர்சென்று சண்முகன் பதத்னை அன்புடன்பணிந்து ஆங்கு அரியதவஞ்செய்திருப்பையேல் சின்னாட்சென்றபின் தேவர்களமுதம் வேண்டி ஆழியைக் கடைவார். அப்போழ்துதிக்கும் அமுதத்துடன் இலக்குமிதோன்றுவாள். அன்னவளுனனைக்காணில் முருகன் கிருபையால்இச்சா

பம் நீங்கி, பொன்னுலகஞ்சென்றாளுவாயென்றுரைத்துச் சென்றனர். அப்பால் துருவாசமுனிவருடைய சாபத்தால் வச்சிராயுதமேந்திய இந்திரனுடன், அசுராதிகளை நிர்த்துக்கொடியச்சமரம்புரிய இந்திரனானவன் நிர்வாகஞ்செய்யமுடியாமல் பொன்னுலகைவிட்டு இங்கிலந்தன்னில் திருச்செந்தூரைச் சேர்ந்து கந்தனை வந்தனித்து அங்கு அரியதவத்தைச் செய்திருந்தான். சிலநாட்சென்றபின் றிருப்பாற்கடலைத் தேவர்கள் கடையும்போதுதித்த அமுதத்துடன் இலக்குமிபிறந்தாள். அன்னவள் திருமுகத்தை இந்திரன் தரிசித்து சாபம்நீங்கி முருகன்கிருபையால் பொன்னுலகெய்தி சகலசம்பிரமத்துடன் அரசுபுரிந்திருந்தான்.

இந்திரன் செயந்திபுரத்திற் றவம்புரிந்திருக்கையில் அயிராவதந் தனதெசமானுக்குநேர்ந்தச் சாபத்திற்கு நாமல்லவோ காரணமாயிருந்தனம் ஆதலாலிப்பாவந் தீரும்பொருட்டுக் கந்தன்பதத்தை அர்ச்சனைபுரியவேண்டுமென்ற ஆவலினால் வீணாக்பாணியாகிய நாரதரைப்பணிந்து சத்திவேலேந்திய கந்தக்கடவுளர் பாதாரவிந்தங்களைப் பூசிப்பதற்கேற்றமந்திரத்தைஉபதேசித்தருளவேண்டுமென நாரதர்மகிழ்ந்து அயிராவதத்தின் தீவிரபக்குவத்தைமதித்து சடாக்ஷரமந்திரத்தை உபதேசித்தருளினார். அம்மந்திரோபதேசம்பெற்றக் கீழ்த்திசை கதிபனாகிய அயிராவதங் கவலைநீங்கி யானந்தக்கண்ணீர்சொரியச் சந்தனாசலச்சாரலையடுத்து முருகக்கடவுளைத்தோத்தரித்து செயந்திமாநகரத்தையும்அதன் பஞ்சக்குரோசத்தெல்லையினையும் சந்தோஷத்துடன் பிரதட்சணம் வந்துவாசனைதங்கியதாமரைபுட்பங்களை ஆகாயகங்கையினின்றுங் கொணர்ந்து சண்முகமூர்த்தியின் திருவடிகளையர்ச்சித்துப் பூசித்தன இவ்விதம் ஐந்துநா ளிராப்பகலும் பூசித்துக் குமாரக்கடவுளின் பெருங்கருணையாற் பாபம்நீங்கித் தேவேந்திரனிடஞ்சென்று இன்பமெய்தி வாழ்ந்திருந்தன.

பதின்மூன்றாவது

அயிராவதபூஷணைச்சருக்கம் முற்றிற்று

---

பதினான்காவது

# இயமன் சிந்துபுரமேவுச்சருக்கம்.

---

அரியதவக்கடலின் வரம்புகண்ட வியாசமுனிவர் சித்தசுதத்முத்தனாகிய சுகமுனிவரைத் திருக்கண்ணருளி எவ்வுலகினுஞ் சிறந்த சிந்துபுரத்தையடைந்தவர்கள் பெரும்பேற்றினையெனதொரு நாவினாலியம்புந்தரமன்று, ஆகினும் ஓர் சரிதத்தைக் கேட்பாயெனச் சொல்வதாகினார். சித்தசனுக்குரித்தாகிய முரசமெனும் ஓசையுடனலைகள்மடங்குகின்ற சமுத்திரத்திலுள்ளபொருளைநாடிக் கப்பலேறிச்சென்று வாணிபஞ்செய்து இராப்பகல்நித்திரையின்றிகடலின்மத்தியில்பலபலமச்சங்களைப்பிடித்துப் பட்சணஞ்செய்து மூடனாய்த் திரியும் மிலேச்சனொருவன் சோரர்களாகியத்தனது மித்திரருடன் நடுக்கடலடைந்து ஆங்குநாவாய்செலுத்திவருகும் வாணிபர்களைக்கொன்று அவர்கள் பொருள்களைக்கொள்ளைகொண்டு தீமையேயுருவெனத்திரண்டுதனதுபுலைச்சமயமேசமயமெனச் செருக்கொண்டுமற்ற மெய்ச்சமயத்தார்களதுசிரங்களைக்கொய்து பாவச்சுமையாகிய சரீரத்தைச்சுமந்துஎவ்வுயிர்க்கும் இம்சையேவிளைவித்து நெடுங்காலம் ஜீவித்திருந்தான். அன்னவன் ஓர்நாள் செயந்திபுரஞ்சென்றுசகலதேவர் முனிவர்களும் வணங்குகின்ற கோவிலின் முன்னின்று இவ்விடம் எதுவெனக் கேட்டுக்கோபங்கொண்டு கோவிலுட்சென்றனன், அத்தரி திரிசுதந்தரர்களைக்கண்டு இவ்வுருவம் யாதெனக்கேட்டமிலேச்சனுக்குரைப்பதாகினர்; சாக்ஷாத்சுயஞ்சோதிவடிவமாகியபரமசிவத்தினுடைய நெற்றிக்கண்ணினின்றுந்தோன்றி சூரபன்மன் முதலாகிய அவுணர்களைக்கொன்று தேவசேனாதிபதியெனுந் திருப்பெயர்பெற்று தம்மைவணங்கும் பக்திமான்களின் துன்பத்தைப் போக்கி இன்பம்பெரச் சகல செல்வங்களையுங் கொடுத்தருளும் முருகப்பிரானுமென்றனர்; இதனைக்கேட்ட மிலேச்சன் மகா உக்ரங்கொண்டு பரமசிவனெவன் அவன் பெற்றமுருகன் எவனென்று நெடியவாலயுதத்தைக்கொண்டு விரைவாக சண்முகமூர்த்தியின் திருவுருவத்தின் முன்னோடிவந்தவேகத்தினால் தட்டுண்டுசுவாமி

யினுடைய பாதாரவிந்தங்களி னெதிரேவிழுந்து மரணமடைந்தான்; அவ்விதம்விழுந்த மூடனாகிய மிலேச்சனுடையசரீரமானவை சண்முகமூர்த்தியை சாஷ்டாங்கமாய்ப் பணிந்த தொண்டர் மெய்போன்றிருந்தன; அக்காலையில் இயமனுடைய தூதர்கள் கோபித்துப் பாசமாகியகயற்றினால் மிலேச்சனைக் கட்டவரும்கால் அங்ஙனம் குமாரனைத்துதித்திருந்த கணநாதர்கள்வந்துகுமரப்பெருமான் திருவடித்தாமரையைச் சிரமேற்கொண்ட சுத்தசித்தனை நீசர்களாகிய நீவிர் தீண்டாதீர்களென எமதூதர்களை விலக்கினார்; அன்னவர் நமது இறைவனாகிய இயமனிடஞ்சென்றறிக்கையிட அவன் காற்றாலொதுக்கிய கரிய மேகம்போன் றதிசீக்கிரமாய் செயந்திபுரத்தையடைந்து சின்முத்திரையாகப் பிரகாசிக்கின்ற குமரக்கடவுளைப் பணிந்து ஆனந்தப்பரவசனாய்த் தோத்திரஞ்செய்வதாகினர் வேதங்கள்முறையிடுகின்ற ஆறுமுகப் பன்னிருபுயாசலக் கந்தனே ஞானமெனுமொழியினால் எனதகவிருளைப்போக்கும் சுடர்மணியேயெனப் பலவிதமாய்த்தோத்திரஞ்செய்யக் கந்தனுஞ்சிந்தைமகிழ்ந்து திருவருட்சுரந்துஇங்கடைந்தகாரணம்யாதென இயமன் சொல்வதாகினான் சாக்ஷாத்பரம்பொருளின் கிருபாநோக்கத்தால் பலவித சாக்ஷியங்களால் விசாரணைபுரிந்து பாவபுண்ணியங்களுக்கேற்பச்சிகிச்சைசெய்திருப்பேன், அதன்படி இக்கொடிய சண்டாளனாகியமிலேச்சனைக் கட்டிக்கொண்டுவரும்படி தூதர்களைவிடுத்தேன் அன்னவர்இதோ விழுந்திருக்கின்றப் பாதகனைத் தொடுமுன் உம்முபக்கத்திருந்த கணநாதர்கள் அடியேனுடைய வேவுகாரர்களைக்கடிந்துகொடிய பாதகனான மிலேச்சனை யுமது திருவடித்தாமரையை யடையச் செய்தகாரணம் யாதென சுவாமிமகிழ்ந்து இயமனுக்கிதனைபோதிப்பதாகினர். ஞானவான்களாகினும் ஞானசூனியராகினும் சொல்லற்கரியஎவ்விதப்பாவச்செய்கைகள்புரிந்திருப்பினும்நாம் வசிக்கின்ற சிந்துபுரத்தை யடைந்தவர் பாவங்கள்நீங்கிப் பரிசுத்தராவரெனில் இவனே சிந்துபுரம்வந்து நமது தரிசனம்புரிந்து பாதத்தின்கீழ்விழுந் துயிர்துறந்தான், ஆதலின் சகலபாவங்களினின்று நீங்கி நமது பாதாரவிந்தமாகிய மோக்ஷத்தைபடைந்தான் இத்தலமானது தேவர்களும் யாவர்களும் முறையேதுதிக்கத்தகுந்த தலமாகுமென்று சொ.. லியருளினார் உடனே இய

மன் குமாரப்பெருமான் செந்தாமரை மலரடிபணிந்துவிடைபெற்றுத் தனது பதியடைந்து வாழ்ந்திருந்தான். ஏ! சுகப்பிர்மனே செயந்தியப்பதி முருகவேள்வசித்தலினாற்சாயுச்சியபதவியைத்தருந்தலமென்று வியாசமுனிவர் சொல்லியருளினார்.

பதினான்காவது

இயமன் சிந்துபுரமேவுச்சருக்கம் முற்றிற்று.

பதினைந்தாவது

## சுகமுனி யோகபூசனைச் சருக்கம்.

---

வண்டுலவவாய்நெகிழும் மதுமலர்சோலைசூழ்ந்த திருச்செந்தூர்மகிமையனைத்தையும் பரமானந்தவடிவமாகியசுகப்பிர்ம மகரிஷிக்குத்திருவாய்மலர்ந்தருளி, வேதங்களைகுடிகொண்டமனத்தினராகிய வியாச முனிவர், குமாரக்கடவுள்பாதாரவிந்தங்களைத் துதித்துப்பரவசராய் இமயகிரிச்சாரலிலுள்ள அரித்துவாரத்தைக் கடந்துமோக்ஷத்திற்கேதுவாகியவெதிரிகாச்சிரமம்போய்ச்சேர்ந்திருந்தனர், அப்பால் அழிவிலா ஜீவன்முத்தராகிய சுகமுனிவர் தேவர்களாலுமடைதற்கரியஞானத்தையருளுஞ்செயந்திபுரமான்மியமாகியத் தேனைப்பிதாவாகிய வியாசமுனிவர் வாயினின்றும் பொழியக்காதாகிய வழியேயுண்டு மகிழ்ச்சியடைந்து உயிர்க்குயிராகிய கந்தசுவாமியி னுபயபாததாமரைமலர்களைத்தியானித்தவராய் நித்திரைசெய்வாரைப்போலப் பிராணாயாமயோகத்திருந்துப் பஞ்சேந்திரியங்களையு மொன்றுசேர்த்து அவைகளைச்சுழிமுனைவழியேநடாத்திப் பந்தபாசங்களைப் போக்கும் பரிசுத்தவடிவமாகிய சண்முகமூர்த்தி யெழுந்தருளியிருக்குஞ் சிந்துபுரமாகியத் திருச்செந்தூரைச்சார்ந்து அறிவினால்·கந்தவெற்பில்வளர்ந்தோங்கும் சிவபிரான் திருவடிகளை உள்ளக்கமலத்திலேபதித்து வணங்கி, குற்றங்களை நீக்குகின்ற பஞ்சக்குரோசத் தெல்லையை வலம்வந்துவதனாரம்பதீர்த்தத்திலேமூழ்கிக்கங்காநதிக்குமெழுமடங்கதிகமாகிய பலனைத்தருகும் கந்தபுட்கரணிமுதலிய இருபத்திநான்கு தீர்த்தங்களினும் ஸ்நானஞ்செய்து சிவபிரானையும்

விநாயகக்கடவுளையும் நவவீரர்களையுந்தெய்வயானையம்மை,வள்ளிநாயகியையும், மகாவிஷ்ணுவையும்,விமானவடிவமாகிய பிரமதேவனையும், சூரபன்மனை வேலுக்கிரையாகச்செய்த ஆறுமுகமூர்த்தியையும் பணிந்து வஞ்சனை வன்னியாகவும் அன்பே வாசனைத்தூகளாகவும், வாயுவே புட்பமாகவும், நெஞ்சமேயமுதமாகவும், நிவேதனஞ்செய்து ஆனந்தக்கண்ணீர்மல்கப் புளகாங்தங்கொண்டு முருகக்கடவுளைத் தோத்திரஞ்செய்வதாகினர்.

## போற்றி விருத்தம்.

திங்களுங் கங்கைசூடுஞ் சிவனருள் குமாராபோற்றி
மங்கையரிருபாகம்வாழ் மாதவன் மருகாபோற்றி
செங்கைமா வடிவேலேந்துஞ் செந்திரு நகராபோற்றி
பங்கயமலர்வாழ் வேதன் பணிந்திடும் பதனேபோற்றி.

ஞானமாவடிவாய் நான்மறைமுடிவாய்
மோனமாய்நின்ற முதற்பரம்பொருளாய்
தானவனொளியாய்த் தற்பரவெளியாய்
வானவர்பணிசெய் மலரடியானேபோற்றி

எனப் பற்பலவிதங்களாசத் தோத்திரஞ்செய்தவனைக்குமரகுருபரனறிந்து சிந்தைமகிழ்ந்து திருவருட்சுரந்து ஓ! சுகமுனியே நீஜீவன்முத்தனகப் பிரகாசிக்கக்கடவாயென வரங்கொடுத்தனர் உடனே சுகமுனிவரானவர்ஆனந்தங்கொண்டுசதாகாலம்போற்றனது நிஷ்டையிலிருந்தனர். அப்பாற் கந்தனும் திருச்செந்தூரில் வாசமாகவிருநது தன்னைச் சிந்திப்போா அஷ்டமங்கள ஐஸ்வரியங்களையடையும்படியா[illegible]ங்களையம்புத்திரபாக்கியங்களையுங்கொடுத்து வாழ்வெய்தச்செய்திருந்தனா. [illegible]மியமனைத்தையும் வியாசமுனிவர் சுகருக்குபதேசித் ததைநைமிசாரணியவாசிகாள் நம்பால் நவின்றனம். இச்சரிதத்தை எழுதுவோர்களும் வாசிப்போர்களும் நீங்காத செல்வங்களைப்பெற்று வாழ்ந்திருப்பாரெனச் சூதமகாமுனிவருரைத்தருளினார்.

விருத்தம்

தந்திமாமுகவன்வாழி சண்முகன்வடிவேல்வாழி
சந்திரமௌலிவாழி தையலிருவர்வாழி
இந்திரனிமையோர்வாழிஇலட்சரும்வீரவாகு
சிந்துமாபுரமான்மியஞ் செப்புவர்கேட்போர்வாழி.

திருச்செந்தூர் மான்மியம் முற்றிற்று.

---





 

# விளம்பரம்.





## கலியாணி பிரஸ், திருநெல்வேலி ஜங்ஷன்.

எஸ். ஆர். பிள்ளை பரோப்ரைட்டர்.

---

தங்கள் வியாபாரத்துக்கு தக்க பெருமையும் புகழும் லாபமும் அடையவிருப்பமிருந்தாலும் நயமான அடியிற்கண்ட சரக்குகள் சில்லரையாகவோ கலியாண முதலிய விசேஷங்களுக்கு மொத்தமாகவோ தேவையிருந்தாலும் ஷை சரக்குகளுக்கு நற்புகழும் சகாயவிலையுள்ள இடமுமான திருநெல்வேலி ஜங்ஷன் றயில்வே லைனுக்கடுத்த கீழ்பக்கமிருக்கும் கலியாணி பிரசில் நேரிலாவது லெட்டர் மூலமாக வி. பி. யிலாவது பெற்றுக்கொள்ளலாம்.

ஷை கலியாணி பிரசில் நற்புகழுடன் விற்கப்படுகிற
சரக்குகளின் விபரம்.

முதல் நம்பர் பட்டணம்பொடி பாலக்காடு வாசனைப்புகையிலை கூந்தலை வளர்க்கும் சந்தன நித்யதைலம், சீயக்காய்தூள் பலகாய் கனியின் ஊறுகாய், ஐஸ் சர்ப்பத்து பன்னீர், சந்தனம், வாசனைபத்திகள் புனுகு ஜவ்வாது குங்குமப்பூ, பச்சைக்கற்பூரம் கோரோசனை கஸ்தூரி பல்பொடி வாசனைப்பாக்கு, பலவகை வாசனைச் சோப்புகள், உயர்தர வாசனைச் சென்டுகள்.

கவனிப்பு:—மேற்கண்டவைகளில் சில முக்கியசரக்குகள் உலகமெங்கும் புகழ்பெற்றதும் மெடல்கள் பரிசுபெற்றதும் நற்சாக்ஷிப்பத்திரங்கள் நிறையப்பெற்றதுமான சிறப்புவாய்ந்த கம்பெனிகளில் ஷை கலியாணி பிரசுக்குமட்டும் சப்ளைசெய்யப்பட வேண்டுமென்ற ஒப்பந்தங்கள்செய்து வரவழைக்கப்படுவதால் அப்படிப்பட்ட ஒப்பந்த சரக்குகள் சதா கவனத்துடன் தயாரிக்கப்படுவதுமல்லாமல் இதரவியாபாரிகளுக்கு அவைகள் வரவுமாட்டாது. அவைகள் தேவையுள்ள வியாபாரிகள் ஷை கலியாணி பிரஸில் பெற்றுக்கொள்ளலாம்.